# தேவாங்கர்களின் திவ்யதேசங்கள்

தேவாங்கராக உள்ள அனைவரும் ஒருமுறையாவது சென்றுவர வேண்டிய திருத்தலங்கள் .

1.) ஒவ்வொருவரும் தங்கள் குல தெய்வம் / மனைதெய்வம்/ வங்குச தெய்வ கோவிலுக்கு வருடத்திற்கு ஒருமுறையேனும் சென்று வரவேண்டும்.

2.) அடுத்தது " ஸ்ரீசைலம் " ஏனென்றால் தேவாங்கர் அவதாரமான தேவதாசமைய்யன் அவர்கள் அங்குதான் தான் 365 நாட்கள் நெய்த துணியை (கம்மி பாவடலு) அங்கு மஹா சிவராத்திரி நாளில் கொடியாக ஏற்றி அவரிடம் வரம்பெற்றார் . அங்கிருந்து தான் மல்லிகர்ஜூன மூர்த்தி, ராமலிங்கேஸ்வரகவும் அம்பிகை பௌராம்பிகை , சௌடாம்பிகை யாகவும் அவருடன் வந்து ஆமோத நகர் அடைந்தார்கள் என்பதை நமது புராணங்கள் கூறுகின்றது. அப்படி அன்னையை அழைத்து வரும்பொழுது ஏற்பட்ட சிறு தவறினால் நாம் அன்னை நீரில் மறைந்து விட்டாள். அப்பொழுது தான் நாம் கதியால் நம்மை வருத்தி நம் அன்னையை அழைக்க ஆரம்பித்தோம் .

இன்றும் அதனை நினைவு படுத்தும் விதத்தில் நாம் அலகு சேவை செய்து வருகிறோம்.

இன்றும் அங்கு சிவராத்திரி அன்று நம் தேவாங்கர்கள் தான் கொடி ஏற்றுகின்றனர் . அதனால் நாம் அந்த ஆதி சிவனையும் அம்பிகையையும் வணங்கி அருள் பெறுவோம்.

3.) நாம் அடுத்து காண்பது ஒரு அழகிய கோட்டையுடன் நமது அம்பிகை கொலுவீற்று இருக்கும் “மொதனூர்” என்னும் ஊர் இது ஆந்திரா, கர்நாடகா, மகாராஷ்டிரா ஆகிய மூன்று மாநிலங்கள் இணையும் இடத்தில் குல்பர்கா மாவட்டம் , கர்நாடக மாநிலத்தில் உள்ளது. அங்கே தான் நமது தேவல முனிவரின் எழாவது அவதாரமான தேவதாசமைய்யன் அவர்கள் சமாதி உள்ளது. அந்த அழகான கோட்டையின் நடுவிலே அன்னை ஒய்யாரமாக அருள் பலித்து கொண்டு இருக்கிறார்கள் நம் அன்னை ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரி.

இந்த புனித திருத்தலம் தேவாங்கருடைய ஏழாவது அவதாரமான தாசமைய்யன் என்னும் தேவதாசமையன் அவர்களால் கட்டப்பட்டது.

4.)அடுத்து நந்தவரம் இந்த ஊரை நாம் அனைவரும் நம் தண்டகத்தில் நந்தவனம் என்று தவறாக அழைத்துக்கொண்டு இருக்கின்றோம். இங்கே அன்னைக்கு கோயில் உள்ளது அனால் அன்னை கருவறையில் இல்லை தனியாக நாம் குலத்துக்காக நிலத்தில் சுரங்கம் அமைத்து அமர்ந்திருக்கிறாள் . இது எதனால் என்ற கேள்வி நமக்கு தோன்றும் , ஏனென்றால் நம் புராண கதைகளிலே படித்துள்ளோம் "நமது சௌடேஸ்வரி நந்தவைதீகர்களுக்கு குல தெய்வம் ஆன கதை" அப்படி நாமும் நந்தவைதீகர்களும் ஒரே கோவிலில் சௌடேஸ்வரியை 7 நிலை ராஜகோபுரம் கட்டி கொலுஅமர்தி இருந்தோம் ஆனால் சில நாட்கள் கடந்த பின்னர் கோவில் நிர்வாகம் "நந்தவைதீகர்களுக்கு" சென்றது அவர்கள் நம்மவர்கள் கோவிலுக்குள் வர தடை செய்தார்கள் பின் நம்மவர்கள் கோவிலில் மறுபுர மதில் சுவரில் வழி அமைத்து அதில் வந்து நாம் அன்னையை வழிபட்டார்கள் .

இந்த சம்பவத்தை பார்த்த நாம் தாய் தான் குழந்தைகளுக்கு ஏற்பட்ட அவமானத்தை போக்க அவள் அந்த கருவறையை விட்டு நம் குல மக்கள் வரும் வழியில் வந்து அமர்ந்தாள். இதை நாம் இப்போதும் "நந்தவரம்" என்னும் ஊரில் காணலாம் .இந்த ஊர் ஆந்திரா மாநிலத்தில் உள்ளது .

5.) அடுத்தது மேற்குவங்க மாநிலம் கொல்கத்தாவிற்கு 100 மைல் அருகில் கங்காசாகர் என்னும் இடத்தில் உள்ள கபிலேஸ்வரர் என்னும் ஆலயம் . இந்த ஆலயம் கடலுக்கு அடியில் உள்ளது தை மாதம் முதல் மூன்று நாட்கள் மட்டும் தான் வெளியில் தெரியும் பக்தர்கள் செல்லவும் முடியும் . மற்ற நாட்களில் அந்த கோவில் கடலுக்கு அடியில் இருக்கும் அதன் மீது மிகப்பெரிய கப்பல்கள் எல்லாம் செல்லும்.
இந்த கோவிலை கட்டியவர்கள் நம் தேவாங்கர்கள் , இந்த அதிசய கோவில் வரதந்து மகரிஷி கொதிரதர்க்கு குல தெய்வ கோவிலாகவும் உள்ளது.
வாய்ப்பு கிடைப்பவர்கள் அந்த தினத்தில் சென்று கபிலெஷ்வரரை வணங்கி வாருங்கள்.

6.) அடுத்தது நாம் தண்டகத்தில் கூறுவோமே "நேபாள தெசதல்லி..." ஆம் நேபாளத்தில் உள்ள பசுபதிநாதர் கோவில் , நாம் ஒரு யுகத்தில் நேபாளத்தில் வாழ்ந்து வந்திருக்கலாம் என்று கூறப்படுகிறது . அங்கே சிவன் சுயம்பு வடிவில் தோன்றி உள்ளார் . அங்கே நாம் கண்டகி நதியில் நல்ல வழுவழுப்பான கரிய கற்கள் இருக்கும் அதை சாளக்ராமம் என்று கூறுவார்கள் அது நமது குல திருவிழாக்களில் சக்தி அழைப்பு பேழையில் வைத்து சக்தி அழைக்கும் நடைமுறை உள்ளது .
இந்த கற்களை தான் நாம் அங்கிருந்து தென்திசை நோக்கி வரும்பொழுது ராமலிங்கேஸ்வரர் ஆக நினைத்து நம்முடன் எடுத்து வந்தோம் என்று நமது குல அறிஞர் பெருமக்கள் கூறுகிறார்கள் .
அதனால் அந்த புனிதமான நதியையும்,பசுபதீஸ்வரரையும் வணங்கி வருவோம்.

7.) மைசூர் சாமுண்டீஸ்வரி அம்மன் திருக்கோவில் ,
நாம் நம் அன்னை சௌடேஸ்வரிக்கு திருவிழா எடுக்கும் பொழுது நமது குலம் காத்த சாமுண்டி அன்னையையும் பெட்டது சௌண்டம்மன் என்று குதிரை மீது அழைக்கிறோம். அந்த சாமுண்டி அன்னை மைசூர் நகரத்தில் நடுநாயகமாக உள்ள சாமுண்டி மலை மீது அழகிய திருக்கோவிலில் சண்ட முண்டரை அளித்த கோலத்தில் காட்சி தருகிறார்கள். இந்த அன்னை தான் நவராத்திரியின் பொது மைசூர் மகாராணியாக ஜம்பு சவாரியில் வலம் வருகிறார் ஒன்பது நாள் கொலுவிருந்து . தேவலரை சாமுண்டீஸ்வரியாக அவதாரம் செய்து அசுரரிடமிருந்து காத்து அதன் பிறகுதான் சாமுண்டி சாந்த சொரூபிநியாக சௌடேஸ்வரியாக அருளினார்.
இந்த மைசூர் கர்நாடக மாநிலத்தில் உள்ளது .

8.)ஹம்பி ஹேமகூட காயத்ரி பீடம் , ஹம்பி ,கர்நாடக மாநிலம் .
ஹம்பி நகரம் மிகவும் அழகான பழமைவாய்ந்த தேவாங்க மன்னர்கள் ஆட்சிசெய்த நகரம் அங்கே மிகவும் தொன்மையான கற்சிற்பங்களும்
கோவில்களும் உள்ளன அங்கே நமது ஹம்பி ஹேமகூட தேவாங்க ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ தயானந்தபுரி சுவாமிகள் அருளாசி வழங்கி கொண்டிருக்கிறார்கள்.

9.) ஸ்ரீ காயத்ரி பீடம் , திருமூர்த்திமலை, தமிழ்நாடு
இங்கே நம் குல அன்னை ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரி உடன் வேத மாதா ஸ்ரீ காயத்ரி தேவி ஆகியோர் தனி தனி சந்நிதிகள் கொண்டு அந்த மேற்கு தொடர்ச்சி மலை சாரலில் திருமூர்த்தி அணையை நோக்கியபடி மிகவும் அழகாக ஒய்யாரமாக எழுந்தருளி உள்ளார்கள் . அத்துடன் அங்கு நமக்கு தேவாங்க மடமும் அனைத்து வசதிகளுடன் உள்ளது .
திருமூர்த்திமலை அமணலிங்கேஸ்வரர் கோவிலுக்கு செல்லும் வழியில்லேயே உள்ளதால் மிகவும் எளிதாக அங்கே சென்று வரலாம்.

10.)உஜ்ஜைன் மகாகாளேஸ்வரர் ஆலயம் .
நமது தேவாங்கர்கள் வடக்கிலிருந்து ஆட்சி புரிந்து தெற்கு நோக்கி பல்வேறு படையெடுப்புகளால் தென் திசை நோக்கி வந்தோம் . அப்படி வருகையில் உஜ்ஜைன் நகரிலும் ஆட்சி பரிபாலனம் செய்துள்ளார்கள் நம் முன்னோர்கள். அப்படி நம் குலம் காத்த ஈஸ்வரர் உஜ்ஜைனில் கொலுவிருக்கிறார் . இந்த திருக்கோவில் நமது செவ்வேலார் குலத்தார் ஒரு பிரிவினருக்கு குல தெய்வ கோவிலாகவும் உள்ளது. இந்த திருக்கோவில் மிகவும் பிரமாண்டமாகவும் கலைநயமிக்கதாகவும் அமைந்துள்ளது.இந்த ஆலயம் இந்தியாவிலுள்ள 12 ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்று. உஜ்ஜைன் மத்திய பிரதேச மாநிலத்தில் உள்ளது

11.) இந்த அற்புதமான திருத்தலங்கள் அனைத்துக்கும் சென்றுவாருங்கள் அப்படி செல்ல இயலாதவர்கள் அனைத்து நெசவாளர்கள் / தேவாங்கர்கள் உள்ள ஊர்களிலும் ஸ்ரீ இராமலிங்க சௌடேஸ்வரி அன்னைக்கு கோவில் அமைத்துள்ளார்கள் அங்கேயும் நம் அன்னை பல அற்புதங்கள் செய்துகொண்டு இருக்கிறார்கள் அங்கே அமாவாசை நாட்களில் சென்று நம் குல அன்னையின் அருளை பெறுங்கள்.
இந்த திருத்தலங்கள் அனைத்தும் நம் குல முன்னோர்களின் அற்புத படைப்புகள் ஆகும் அவற்றை நமக்காக ஆராய்ந்து அளித்த புலவர் பெருமக்கள் அனைவருக்கும் நன்றிகள்.